# *Taṉavaiciya ūḻiyaṉ*

*Malar 1, itaḻ 9*

*November 12, 1920*

Record no. 148

REGD. NO. M. தந்திவிலாஸம்-"Oolian" உ சிவமயம். "DHANAVYSIA OOLIAN"

# தனவைசிய ஊழியன்

வெள்ளி தோறும் வெளிவரும்.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் க. ரௌத்ரி-ஞு ஐப்பசிமீ உஎஉ வெள்ளிக்கிழமை. (கஉ—கக—ககூஉ௦) இதழ் சு.

## நாட்டுக்கோட்டை செட்டிசாதி என்பது யாருக்குரியது?

நம்மவர்கள், எழுதுகிற பத்திரங்கள் அண்டிமாண்டு முதலியவைகளில் தங்கள் விலாசம் பெயர்களைக்குறிப்பதற்கு முன்னே "நாட்டுக்கோட்டை செட்டி சாதி" என்று எழுதிவருவது வழக்கமாயிருந்து கொண்டிருப்பது நம்முடைய சாதியார்களனைவருக்கும் தெரிந்திருக்கலாம். இன்னும் நம்மைத் தனவைசியர் மகுடவைசியர் எனப்பல பல விதமாகவும் அனேகர்கள் சொல்லுகிறார்கள். அவற்றிற்கெல்லாம் ஏதாவது ஏதுக்களுண்டா? நாட்டுக்கோட்டை செட்டிசாதி என்பது மேல் கண்டவைகளைப்போல் ஒரு காரணப் பெயர்தானா? அப்படியானால்அவைகளைக் குறிப்பிடாது இது ஒன்றுமட்டிலும்முக்கியமாய்க் குறிப்பிடுவானேன்? தொன்று தொட்டு குறிப்பிட்டுவருதலால் ஒருமுக்கியகாரணமிருக்கலாம். அப்படியிருந்தால், அதைப் பிறர் கொள்ளையிடாது காத்துக்கொள்ளவேண்டியது நமது சமூகத்தின் முக்கியமான கடமையல்லவா? ஆவுடையார் கோயிலை (ஆவுடையார் கோயில்) அடுத்துள்ள எம்பல் கிராமத்தை [illegible] ஊராகக்கொண்டு [illegible] சில [illegible]யில் குடியிருந்துவரும் எம்பல் செட்டிப்பிள்ளைகள் என்ற ஒரு வகுப்பார், பர்மாசாதிகளில் இரங்கூனிலேயாம் [illegible] செட்டிக்குக் கொடுத்து வாங்குகிறார்கள். அவர்கள் கொடுக்கும் பணத்துக்கு எழுதிவாங்கும் அண்டிமாண்டுகளில் நாம் எழுதுவதுபோலவே, நாட்டுக்கோட்டை செட்டி சாதி என்று எழுதிவிட்டு அவர்கள் விலாசம் பெயர்களை எழுதிவருகிறார்கள். அப்படி எழுதுகிற அண்டிமாண்டுகளில் நம்மவர்களும் எழுதிக் கொடுத்து பணம் வாங்குகிறார்கள். இதை நோக்கும்போது பர்மாவிலுள்ள நம்மவர்கள் நாட்டுக்கோட்டை செட்டி சாதி என்பது இன்னகாரணம்பற்றிவந்ததென்பதைத் தெரிந்து செய்கிறார்களா அல்லவா என்பது சந்தேகிக்க வேண்டியிருக்கிறது. ஆதலால், இனதக்கண்ணும் நம் நன்குலத்தலைவர்கள், நமது பெயருக்குமுன்னே நிற்கும் தனவைசியர் மகுடவைசியர் நாட்டுக்கோட்டை செட்டிசாதி முதலியவைகளுக்குக் காரணங்களை ஆராய்ச்சி செய்து எழுதவேண்டும். அதிலும் முக்கியமாய் இப்போது நம்மவரல்லாதவர்கள் கையாடிவரும் நாட்டுக்கோட்டை செட்டி சாதி என்பது ஒன்பது கோயில்களையுடைய நமக்கே உரியதென்பதானால், அதற்குத்தக்க காரணங்களை நமது ஊழியன் வாயிலாகவே எழுதவேண்டியது. அப்படிப் பலரும் ஒப்பத்தகுந்த காரணங்களிருந்தால், பிறர் கொள்ளையிடாமல் பாதுகாக்க வேண்டியது, நமது சமூகத்தாரனைவருக்கும் பொதுவாகவும், இரங்கோன் நகரத்தாருக்கு அவசியமாகவும் கவனிக்கத்தக்கதாகும்.

மதியழகன்.

## நாட்டுக்கோட்டையாரின் விவாகமும், சலவைக்கல் சாமான் சீர்முறையும்.

நமது குடும்பங்களில் நடக்கும் விவாகத்தில் பல உபயோகமற்ற சாமான்கள் பெண்ணுக்குச்சீர்வரிசையாகக்கொடுக்கப்படுகின்றன; அவைகளுள் சலவைக்கல் சாமான் ஒருவகை. இவை அலைகடலுக்கப்பாலுள்ள ஓர் அன்னியநாட்டிலிருந்து வரவழைக்கப்படுகின்றன. அவை என்னவோ என்று எண்ணவேண்டாம். அவைகளாவன:—பன்னாங்குழிஎன்றும், தாயக்கட்டம் என்றும், அம்மி என்றும், குழவி என்றும், முக்காலி என்றும், நாற்காலி என்றும், ஆசனப்பலகை என்றும் இன்னும் பலவித சாமான்கள் செய்யப்படுகின்றன. இவை அவசியந்தானா என்று யோசிக்கவேண்டும். பெற்றோர்களே! தங்களுடைய பெண்மினகாயைச் சாதாரணக் கல்லினால் செய்யப்பட்ட அம்மியில் அரைக்கக் கைகள் நோகுமென்றனவோ? அல்லது சாஸ்திரம், சலவைக்கல்அம்மிதான் பெண்ணுக்குச் சீர்வரிசையாகக் கொடுக்கவேண்டுமென்று கூறுகிறதோ? அல்லது இது நமது புராதன வழக்கமோ? ஒன்றுமில்லையே. பின்னர் ஏன் இவ்விதவீண் செலவுகளைச் செய்யவேண்டும்? இவ்விதச் செலவுகளால் தங்களுக்குக் கௌரவம் என்று நினைக்கின்ற உங்கள் சிந்தை

யை அடக்கி வீண்செலவு செய்யாமல் தேசமுன்னேற்றத்தில் செலவு செய்வீர்களானல், கௌரவமும் புண்ணியமும் தாமாகவே வந்து கைகூடும்.

ஆரம்பத்தில் மேற்படி சாமான்கள் பன்னங்குழி ஒன்றுக்கு விலை டாலர்கள், இப்போது பன்னங்குழி ஒன்றுக்கு விலை உஅ ஆக விருக்கிறது. ஒருவர் ஆர்டர்கொடுத்துச் செய்துவைத்திருக்கும் சாமான்களைச் சீக்கிரம் வாங்கவேண்டுமென்று நினைத்து வேறொருவர் அதிகவிலை கொடுத்து வாங்குவதும், அந்தப்படி அவர்கள் விற்பதும், இவ்விதமே விலை ஏறிக்கொண்டு வருகின்றது. அந்தோ! இவ்விதமே பல உபயோகமற்ற சாமான்களை அதிகவிலை கொடுத்து வாங்கிப் பெண்ணுக்குச் சீர்முறையாகக்கொடுத்து வருவது விசனிக்கத்தக்கவிஷயம். அரும்பிரயாசைப்பட்டுச் சம்பாதித்தபொருளை அனாவசியமானதுறைகளில் வீண்செலவு செய்வதை நிறுத்தி, சமூகமுன்னேற்றத்தின் பொருட்டும் தேசமுன்னேற்றத்தின் பொருட்டும் செய்யவேண்டுவதான தர்மகைங்கர்யத்தில் செலவிட்டால், புண்ணியமும் புகழும் ஒருங்கே சித்திக்கும். அவ்விதமே எல்லாம் வல்ல ஈசன் திருவருள் பாலிப்பாராக.

தனவைசியன்.

## நம்மவர் விவாகம்.

கண்டனூர் ஸ்ரீமான் நா. அ. நா. ம. நாச்சிசெட்டியாரவர்கள் எழுதுகிறார்கள்.

நமதுசமூக நன்மைகளையுத்தேசித்துச் சீர்திருத்தம் செய்யவேண்டிய கொள்கைகளைக் கைக்கொண்டு தாங்கள் வெகுஊக்கத்துடன் நடத்திவருகிற "தனவைசிய ஊழியன்" பத்திரிகையில், புரட்டாசி௴ ௩௰ வரையிலுள்ள பத்திரிகைகளை நான் வாசித்துப்பார்த்தேன். அதில் நமது சமூக நண்பர்கள் பலரும் சமூகத்தில் உள்ள குறைகளைப்பற்றிச் சொல்லியிருப்பதைப்பார்க்க உண்மையானதாதிமான்களின் மனம் வருந்தாதிராது.

நமது சமூகத்தில் முன்கால வழக்கங்களை மறந்து நமது குடும்பங்களில் நடக்கும் விவாகங்களில் நாம் செய்யும் பொருட்செலவும் விருந்தும் சாமான்களும் பயன் பெறாத செய்கைகளும் இருக்கின்றனவென்பதை நான் சொல்லிப் பிறர்கள் அறிந்துகொள்ளவேண்டியதென்பது இல்லை. செல்வந்தர்கள் அதிகச்செலவுசெய்து விவாகம் கொண்டாடவேண்டுமென்பது தப்பொன்றில்லை. உலகில் நாமும் பெயரெடுக்கவேண்டுமென்ற விபரீதஎண்ணங்கொண்டே, அப்பணமுடையோர்களிடம் நாம் என்ன அந்தஸ்தில் குறைந்தவர்கள் என்றும் நப்பெண்ணங்கொண்டு, அவர்கள் செய்யும் விவாகமுறைக்கு வந்திடும் நமது மேன்மைபொருந்தியதாய் இருக்கவேண்டுமென்றெண்ணியோ, வேறு எவ்விதத்தாலோ, ஏழைகளும் ஏராளமாகச்செலவைச் செய்து தாம் கடனாளியாகிக் கெடுவதன்றித் தம்மைச் சார்ந்தோரையும் கஷ்டத்துக்குள்ளாக்கி விடுகிறார்கள். அந்தோ! அவர்களது ஆசை இவ்வாறாகவா இருத்தல்வேண்டும்! வேறு நல் விஷயங்களில் செல்லக்கூடாதா! நமது சமூகத்தில் அனாவசியமாக நடக்கும் செலவுகளைக் குறிக்க உதாரணமாக ஒரு கல்யாணம் நடந்த விவரத்தைச் சொல்கிறேன்:—

"சம்பந்தம்பேசிக் கல்யாணம் நடத்தினார்கள். மாப்பிள்ளை வீட்டு மத்யான்னச் சாப்பாட்டில் பெரிய வாழையிலைபோட்டுக் கறிகள் சம-ம், ஊறுகாய் உம-ம், குழம்பு அ-ம், ரஸம் ச-ம், பாயஸம் ௬-ம், வர்க்கான்னம்கரு-ம், பலகாரம் ம-ம், பழவர்க்கம் ம-ம்தான் வைத்திருந்தார்கள். சோற்றுக்குச் சிறிய கரண்டியினால்தான் செய்விட்டார்கள்" என்று அங்கு விஜயம்செய்திருந்த பெண்மக்களும் சம்பந்தப் பெண்மக்களும் பேசிக்கொண்டிருந்து, "அது தங்கள் மனதுக்குக்குறைச்சலாக இருப்பதாகவும் இதற்குமேலாகத் தங்கள் வீட்டில் செய்துவிட வேண்டுமென்றும்" எண்ணிக்கொண்டு வீட்டுக்கு வந்து, தங்கள்புருஷர்களிடம் "ராத்திரிக்கு அவர்கள் வீட்டுச் சாப்பாட்டைக்காட்டிலும் நமது வீட்டில் நாம் அதிகச்செலவு செய்தால்தான் நமக்கு மதிப்புண்டாகு"மென்று கடியாரத்துக்குச் சாவிகொடுப்பதுபோலத் திருத்தினவுடனே, புருஷர்களும், பெண்டுகள் வார்த்தைக்கிணங்க வேண்டியதே கடமை என்று நினைத்து, உடனே, கண்ட்ராக்ட் சமையல்காரனை அழைத்து, "நமது ஆச்சிசொல்கிறபடி நம் வீட்டு ராத்திரிச் சாப்பாட்டுக்குத் திருவையாற்றுத் தாட்டிலைகளில் பெரிய இலைகளாக எடுத்துப் பந்திக்குப் போட்டு, கறிகள் ரும-ம், அக்கரைதேசத்து ஊறுகாய்கள் ரும-ம், குழம்பு க-ம், ரசம் க-ம், ஆடுதுறைத் தொன்னையில் பாயசம் அ-ம், வர்க்கான்னம் உரு-ம், பலகாரம் கரு-ம், பழவர்க்கம் உ௦ம், சாதத்துக்கு ஒரு பெரியகரண்டியினால் ஒரு கரண்டி செய்யும்" படிமாறும்படி ஆர்டர் செய்துவிடுகிறார்கள், இப்படியெல்லாம் போட்டிபோட்டுக்கொண்டு அனாவசியமாகச்செலவுசெய்யவும், நகைகள், வைரச்செட்டு க- சிவப்புச்செட்டு க- சாதாரண காலத்தில் போட்டுக்கொள்ள சாதாநகைச் செட்டு க- மங்காளம்வகைப் பாத்திரங்களும் மாணமதுரைவகையரப் பாலைச் சட்டிகளும் ஜப்பான்வகையரா சாமான்களும் சேகரித்துக் கல்யாணத்தேதிக்கு முன் ஆறுமாதகாலமாகச் சீர்கள் வைக்கவும், வேண்டிய சாமான்கள் சம்பாதிக்கவும் இயலாதவர்கள் என்னசெய்வது? அருமையாக வளர்த்துவந்த பெண்களை விற்றுத்தானே மேற்கண்டவைகள் செய்ய வேண்டியிருக்கின்றது!

நமது சமூகத்தில் சிலர் நல்ல இயல்புடன்இருந்தாலும், "தாத்தையுத்தேசித்துத்தான் அவர்களது பையன்கட்குப் பெண்கள் கிடைப்பது" என்னும் வழக்கமொன்றும் இருந்து வருகின்றது. ஆனல் அவர்கள் தங்களது அருமையான ஒரே ஒரு ஆண்பிள்ளைக்கும், தற்காலத்துக்கேற்ற காபிகிளப் பலகாரம் வாங்குவதான சொற்பஆசைக்குக்கூட ரூ. ஒன்று இரண்டு கொடுத்தால், பெரிய கஷ்டம் வந்துவிடுமென்று கருதிக்கொடுக்காதிருந்து விடுகிறார்கள். அதனல், அந்தப் பையன்கள் துர்மந்திரிகளுடன் சேர்ந்து, தமது தாய்தந்தையர்களைமறந்து, ஆயிரம் ரூபாய்க்குப் பிராமிசரிநோட் எழுதிக்கொடுத்து, இருநூறுரூபாயைவாங்கிவீண் செலவுசெய்து, வீணைகெட்டவழிகளில் பிரவேசித்துக் கெட்டுவிடுகின்றார்கள். இப்படி ரூபாய் பதினாயிரம் கோட்டுகளும் ஈடுபத்திரங்களும் உண்டியல்களுமாகஎழுதிக்கொடுத்தபிறகுபெற்றோர்கள் தெரிந்து, அவனை நல்வழிக்குக் கொண்டுவரக்கூடிய வழியையறியாமல், பத்திரிகைகளில் தத்தம் மக்களது துர்நடத்தையை விளம்பரப்படுத்திக் கடன்காரர்கட்கு எச்சரிக்கைசெய்கிறார்கள். பிறகு அந்தக் கடன்காரர்களுடன் வாதம்செய்து அவர்கள் வியாஜ்யம்செய்த பிறகும், வக்கீல் முதலான செலவுகளை ஏராளமாகச் செய்து எதிர்வாதம்செய்தும் கடைசியில் தோற்றுப்போய் கடன் கொடுத்தவர்க்குச் செலவுடன் தொகைகளையும் கொட்டிக் கொடுத்துப் பொருள்களையும் இழந்து தாங்களையும் இழந்து தங்கள் குலத்திற்கு இழிவையும் சம்பாதித்துக்கொள்ளுகிறார்கள். இதனல்தாங்கெட்டுத் தகுந்த இடங்களில் கல்யாணம் பேசவும் முடியாதவர்களாகி விடுகிறார்கள். தரக்குறைவினல் வரக்கூடியபெண்ணும் பெறக்கூடாமல் போனதனல், வருந்தி மற்றும் பெண்கட்குக் கிரயங்கொடுக்க வழியுமில்லாமல் விழித்துக்கொண்டிருக்கிறார்கள்.

ஆகையினல், நமது நண்பர்கள் முன் பத்திரிகைகளில் கூறியிருக்கிறபடி, நமது சமூகத்தார்கள் அதிகசீக்கிரத்தில் கூட்டங்கூடி மேற்கண்டகுறைகளைத்திருத்தி, கல்யாணம்செய்யப் பெறாமல் கவலையுடன் எந்த வழியில் செல்லுவோமென்று ஏங்கிக்கொண்டிருக்கிற நமதுசகோதரர்களை நம் சமூகத்திலேயே இருந்து நற்காலம்கழித்துவரும்படியாகவும் மற்றைச் சீர்திருத்தங்களையும் செய்து நமது சமூகம் கௌரவத்துடன் இருக்கும்படியாகவும் செய்வார்களென்று நம்புகிறேன்.



# சமயப் பகுதி.

## தீபாவளி அல்லது நரகசதுர்த்தசி.

ஐப்பசி௴ கிருஷ்ண பக்ஷத்துச் சதுர்த்தசி திதியிருக்கும் விடியற்காலத்தில், எண்ணெய் தேய்த்துக்கொண்டு ஸ்நானம் செய்து, கோடிவஸ்திரங்கள் உடுத்துக்கொண்டு, மங்களகரமாக இருந்து ஒரு நல்விருந்துண்டு பண்டிகை கொண்டாடுவதே, தீபாவளிப் பண்டிகையென்று நடைபெற்று வருகிறது. இதில் ப்ராம்மணர்கள் எமதர்மராஜனைக் குறித்துத் தர்ப்பணமுஞ் செய்வதுண்டு.

ஸ்ரீ கிருஷ்ணபகவான், லோக ஸம்ரக்ஷணார்த்தம் அவதரித்திருந்த காலத்திலே, பிராக்ஜோதிஷம் என்னும் பட்டணத்தையாண்டுகொண்டிருந்த நரகாஸுரன் என்னும் பெருத்த பலிஷ்டன், தன்னயம் மேற்கொண்டவனாகித், தேவதைகளையும் ரிஷிகளையும் ஸாதுக்களையும் மற்றுமுள்ள பிரஜைகளையும் துன்புறுத்தியழித்து, பூமண்டலமுழுதும் உள்ள பொருள்களெல்லாம் தனக்கும் தன் குடும்பத்துக்கும் தன் சுற்றத்தார்க்கும் தனது ராஜாங்கத்துக்குமே உபயோகப்படும்படியாகச் செய்து, வஞ்சித்துக்கொண்டிருந்தான். வருந்திக்கொண்டிருக்கும் பல ப்ரஜைகளினுடைய பிரார்த்தனைகளெல்லாம் ஒருங்குகூடித்துஷ்டநிக்ரஹத்திற்கென்றே அவதாரஞ் செய்துள்ள மூர்த்தியாகிய ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாவை, அவ்வஸுரனேடு யுத்தம் செய்யும்படியாகத் தூண்டிவிட்டது.

அதர்மத்தையழித்துத் தர்மத்தை நிலைநாட்டுவதற்காக அவதரித்த ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா, உலகினரெல்லாரையும் வருத்தி அவரதுசுகங்களையெல்லாம் தனதாகவே பங்கிட்டுக்கொள்ளையடிக்கும் நரகாஸுரனிடம் வெறுப்புக் கொண்டவராகி, பூசக்தியெல்லாம் ஒருமிக்கத் திரண்டது போன்றுள்ள—பூமாதேவியின் அம்சமான—சத்யபாமா என்னும் தேவியுடன் பிராக்ஜோதிஷ நகரம் சென்று, அங்கு அவ்வஸுரனுக்குத் துணைவராக இருந்த மூரன் நிசுந்தன் ஹயக்கிரீவன் அகோரபாலன் விருபாக்ஷன் பிராம்மணன் பஞ்சசனன் என்னும் ஸேனபதிகளையும் அளவிறந்த ஸைந்யங்களையும் அழித்து, அவ்வஸுரனையும் கொன்று, உலகினர்க்கு முன்போலவே சுகத்தைப் பங்கிட்டுக்கொடுத்தார்.

நரகாஸுரன், இறக்கும்போது, ஞானம் தோன்றினவனாகித் தனது தப்பிதத்தை யுணர்ந்து, பரமாத்மாவை வணங்கிப் பிரார்த்தித்துக் கேட்டுக்கொண்டதாவது:—"எனது தாமஸபுத்தியினலும் தாமஸச் சேர்க்கையாலும்நான் படித்தறிந்திருந்த படிப்பையும் மறந்து ஸத்வ குணத்தையிழந்து தாமசமேலீட்டினல், "உலகமெல்லாம் எனக்கே வசப்பட்டதாகவும் உலகப் பொருள்களெல்லாம் எனக்கும் என் வகுப்பினர்க்குமே யுரிய போக்யப் பொருள்களாகவும் உலகினரெல்லாம் எனக்கு அடிமைகளாகவும்" மதித்து, தெய்வவுண்மையை மறந்து, ஸாதுக்களது தவத்தையும் லட்சியம்செய்யாது, "புத்தியும் பலமுமே தெய்வமெனவும், கட்குடித்தலும் காமநுகர்தலும் மாம்ஸமுண்ணலும் மயங்கித் திரிதலுமே மோக்ஷமெனவும், நயவஞ்சகம்செய்து நம்பினரைக்கொன்று செய் தவரை வருத்தலே செய்ய கருமங்களெனவும், நானிழைத்ததும் நானிசைத்ததுமேநல்ல விதிகளெனவும்" கொண்டு, "தேசத்துரோகிகளையும் தேசத்துரோகிகளையும் சாரணர்களாகவும்பெற்று உலகை வருத்துவதே உபாய" மெனத்திரிந்து வந்தேன். என் மனச்சாட்சியும் அவ்வப்போது எச்சரிக்கை செய்துகொண்டு வந்ததாயினும், மதத்தினலே உன்மத்தனாகி, மந்திரிகள் சொன்ன தந்திரங்களையே மகாமந்திரமெனக்கொண்டு மன்பதையை மிகவும் வாட்டிவிட்டேன். அவர்களும் அடிமைகளாய்ப் போனதனல், எதுஞ்செய்ய இயலாது மௌனத்துடனே மறுகலாயினர். உலகமோருடலாய் உயிர்களோருயிராய் நின்றுள்ள ஒப்பிலா மெய்ப்பொருளாகிய நீர் செய்யவேண்டியதைச் செய்தீர். நானும் என்போலுள்ளாரும் பெறவேண்டிய தண்டனையைப் பெற்றுவிட்டேன். ஆயினும், "அந்திய காலத்தில் சத்யஞானனந்தமயனய் மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருளுமாகிய நீர் சுத்தஸாத்விக உருவுடன் காட்சிகொடுத்ததனல், எனக்கு நல்ல ஞானம் உதித்துவிட்டது. இதற்குப் பிரயோஜனம் இனி எப்போதும் எனக்குந் தெருமதி தோன்றாதிருப்பதே யாகும். அதற்கு சூசகமாகவும் எனதுசரித்திர ஞாபகத்தினல் பிற்பட்டாரும் திருந்துவதற்காகவும் நான் இறந்த இன்றையதினம் வருஷந்தோறும் மங்களதினமாகக் கொண்டாடப் பெறவேண்டும்; இந்த விடியற்காலத்தில் உனது திருமார்பில் வீற்றிருக்கும் லக்ஷ்மியானவள் என்னை நினைத்து ஸ்நாநம் செய்பவர் வீடுதோறும் நர்த்தனம்செய்யவேண்டும்; எல்லாத் தீர்த்தங்களிலும் கங்கை பிரஸன்னமாகியிருக்கவேண்டும்; உலகிலுள்ளவர்களும் இன்றைய விடியற்காலையில் மங்களமாக அப்யங்கன தைலஸ்நானம் செய்து தத்தம் சக்திக்கேற்றபடி மங்களகரமாகஇருக்கவேண்டும்" இது எனது பிரார்த்தனை. நீர் ஸர்வநியந்தாவாதலால், அப்படியேநடக்கும்படி ஏவவும்வேண்டும்" என்றான். பரமாத்மாவும் சரண்யனுகையால், சரணகதனுடைய கோரிக்கையை ஈடேற்றுவித்தார். அந்தப்பரமாத்மாவினுடைய கட்டளையினல் அன்று முதல் இப்பண்டிகை கொண்டாடப்பட்டு வருகிறது.

இவ்வித மங்கள ஸ்நானம் செய்யும்போது நாயுருவி தும்பை இந்த மூலிகைகளைக் கொண்டுவந்து தலையில் தடவிக்கொண்டு ஸ்நானம் செய்வதுமுண்டு. ஏனெனில்:— இவைகள்தாம் நரகாஸுரனுடைய பலத்தைக் குறைத்துத்தெய்வஞானத்தையுண்டு பண்ணின என்பதும் ஐதிஹ்யம்.

தீபாவளி என்னும் சொல்லுக்குத் தீபத்தின் அதாவது விளக்குகளின், ஆவளி அதாவது வரிசையென்று பொருள் ஸாதாரணமாகத் தோன்றுகிறது. தீபவரிசைகளைக் கார்த்திகையில்தான் வைப்பது வழக்கம். சிதம்பரத்துக்கு வடக்கேயுள்ளநாடுகளில், இந்தத் தினத்தில் மங்களஸ்நானம் செய்து விருந்துண்ணலும், கார்த்திகையில், தீபவரிசை வைத்து வெடிசுடலும், ஸங்கராந்திப் பொங்கலில், புது வஸ்திரமுடுத்துப் புண்யஞ் செய்தலும் வழக்கமாகக் கொண்டாடி வருகிறார்கள். எங்ஙனமேனும் இந்தப்பண்டிகை பொது இந்துப் பண்டிகையாகக் கொள்ளப் பெற்று வருகிறது.



நாளென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்றென்
செயும்! குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

தனவைசியஊழியன்.
காரைக்குடி. ஐப்பசிமீ ௨௭௨.

## நமது நாட்டுச் சபைகள்.

நமதுநாட்டில் சுமார் ௰ வருஷங்கட்குமுன்னர், சபைகள்கூட்டி உபந்யசிக்கும் வழக்கத்தை உண்டுபண்ணினவர்கள் ஸ்ரீமாந் மு. கதிரேசச் செட்டியாரவர்களும், ஸ்ரீமாந் வ.பழ. சா. பழனியப்ப செட்டியாரவர்களுமேயாவர். இவ்விருவரும் முதன்முதலாக மேலைச்சிவபுரியில் சன்மார்க்க சபையை நிறுவிப் பல வித்வான்களைக்கொண்டு உபந்யாசங்கள் செய்வித்ததோடு, ஒரு தமிழ்க் கலாசாலையையும் கண்டனர். ஸ்ரீமாந் கதிரேசச் செட்டியாரவர்களின் முயற்சியாலேயே இன்னும் பல ஊர்களில் பல சபைகள் ஏற்பட்டன. இந்தச்சபைகளியாவும்பொதுச்சபைகளாகவும், உபந்யாசகர்களின் அபிப்பிராயங்களைத் தெரிவிப்பனவாகவும், இருந்தனவேயன்றித் தமக்கெனச் சிறப்பான நோக்கத்தைக் கொண்டு அதற்கே உழைத்து வருவனவாயில்லை. ஆரம்பத்தில், சபைகளின் விஷயங்களில் பயிற்சிபெறாத ஜனங்களிடையில் ஆரம்பிக்கும் சபைகள், இப்படித்தான் நடைபெற வேண்டும். பின்னரேதான் பெரும்பயனை விளைவிக்கும்சபைகள்காணப்படுதல் சுலபமாகும்.

இந்தச்சபைகளில் அநேகங்கள் சுறுசுறுப்பாக வேலைசெய்யாதிருக்கின்றன. காரணம் பல. பொருளில்லாமலும், நடத்துவோரில்லாமலும், கட்சிப்பிரதிகட்சிகளினாலும், ஜனங்களின் உதவியில்லாமலும் அநேகம் சபைகள் ஒடுங்கிப்போய்விட்டன. சபைகளை ஒரு கோவிலாகப் பாவித்தல்வேண்டும். அங்கு, படித்தவர்கள் சாஸ்திரசம்மதமான விஷயங்களையே பேசுவார்களாதலாலும், எப்பொழுதும் சாஸ்திர மணங்கமழுமாதலாலும், சபைகளிலிருந்து பலவிதமான மதப்பற்றும் தேசப்பற்றும் ஜாதிப்பற்றும் உண்டாகும் ஒரு சிறந்த தெய்விக ஸ்தலமாயிருப்பதாலும் அதனை யாதரித்துவரவேண்டிய தவசியமாகும்.

அமெரிக்காமுதலிய தற்கால நாகரிகநாடுகள் முன்னுக்கு வந்ததற்குக் காரணம் சங்கங்களேயாகும். மற்றும், யார் முன்னுக்கு வந்திருக்கிறார்களோ அவரனைவர்க்கும் காரணம் சங்கங்களென்றுகூறலாம். அமெரிக்கர் கோடிகோடியாகப்பொருள்களைச் சங்கங்கட்குகொடுக்கும்ஏற்பாட்டைக்கொண்டிருக்கின்றனர். நமதுஜனங்கள்வெள்ளைமூஞ்சிகட்குமாலைசாத்தி வணங்குவதிற் காட்டும் ஊக்கத்தில் நூற்றிலொருபங்கு சபைகளிற்காட்டுவார்களானால் போதியதாகும். அவ்வளவுபற்று உள்ளத்தில் வைக்காத காரணத்தால், ஆங்காங்கே தோன்றிய சங்கங்கள் நட்சத்திரங்களைப்போல மறைந்துபோயின.

சிலவிடங்களில் பல தர்மப்பிரபுக்கள், ஏராளமானபொருளையும்கொடுத்து இன்னுங்கொடுக்க விருப்பமுடனிருந்தும் நடத்தும் திறமையுடையவர்களில்லை. திறமையுடையவர்களும் பல ஜோலிகளால் முன்வர முடியவில்லை. இப்படிச் சில சபைகள் தூங்குகின்றன.

சில சபைகள் நம் சமூகத்தை யல்லோலகல்லோலப்படுத்தி ஒற்றுமையையகற்றி முன்னேற்றத்தைப் பாழ்படுத்திவருகிற கட்சிப்பிரதிகட்சியிலகப்பட்டுத் தவிக்கின்றன. சபையின் காரியதரிசியினிடம் தனக்கு விருப்பமில்லையாயின், சங்கத்தில் ராஜீநாமா கொடுக்கிறது; அதைப் பற்றித்துவேஷங் கொண்டாடுகிறது; ஊர்க்கட்சிகள் கோயிற்கட்சிகள் குப்பைக்கட்சிகள் இந்த ஆபாசக்கட்சிகளையெல்லாம் புகவிட்டுப் பாழ்படுத்துகிறது; இவையெல்லாம் ராக்ஷஸ குணங்களாகும். இப்படிச் சிலசபைகள் தொலைந்தன.

இன்னும் சில சபைகள் நடத்துவோரின் குறைவுபாட்டால் களைப்புற்றன. நடத்துவோர் பொதுஜனங்களை யலட்சியப் படுத்தியதனாலும் அவரது ஒழுக்கத்தவறான நடத்தையினாலும், அகங்காரத்தினாலும், பொதுஜனங்கள் சபைகளை விரும்பாததனாலும்சிலசபைகள் போயின. மேலும் சபைகட்குப்போதல் கேட்டை விளைக்கு மென்றுகூடக்கருதிவிட்டனர்.

ஒருவாறாக இத்தனை கஷ்டங்களினின்றும் விடுபட்ட சிலசபைகள் சுமாராக நடைபெற்று வருகின்றன. அவைகளும்சுறுசுறுப்பாகவும், தைரியமாகவும் நடத்தப்படவில்லை. நம் நாட்டில் சபைகளால் அநேக காரியங்கள் நடைபெறவேண்டியிருக்கின்றன. அதனைப் பொதுசனங்கள் கவனிப்பாராக.

## தமிழர் சரித்திரமும் தமிழரும்.

தமது சரித்திரமுணர்ந்து கொண்டார் யாவரும் தடுமாற்றம் கொள்ளவேமாட்டார். தம்மைத் தமிழரென்றும்; 'தமது முன்னோர்கள் வீரராகவும் விரகராகவும், தியாகியாகவும், யோகியாகவும், உபகாரிகளாகவும், உபதேசகர்களாகவும், கவிகளாகவும் சிற்பிகளாகவும், மன்னராகவும் மந்திரியாகவும், சேனாபதியாகவும் ஸ்தானாபதியாகவும், சுத்தராகவும், சுதந்தரராகவும் இருந்து வாழ்ந்தார்கள்' என்றும்அறிந்துகொண்டால், தமிழர் தம்மை அடிமைகளாகவும் சோம்பேறிகளாகவும் விதியை நினைத்திருக்கும் வீணர்களாகவும் எண்ணித்திரியமாட்டார்கள். இப்போது உலவிக்கொண்டிருக்கும் நாவல்களெல்லாம் மாறி உண்மையான சரித்திரப் புஸ்தகங்கள் உலவவேண்டும். ஊக்கத்தைக் கொடுக்கும் உண்மையான வீரர் சரித்திரங்கள் வெளிவரவேண்டும். காமத்தை உற்பத்தி செய்யும் கற்பனைக்கதைகள் கழிந்தோடவேண்டும். பல தேச சரித்திரங்களையும் பல பாஷைகளிலும் பண்புடன் கற்றுச் சரித்திரமெழுதுதலில் வல்லவரான தேசபக்தன் ஆசிரியர் ஸ்ரீமான் வ.வெ.ஸு.ஐயரவர்கள் பேரன்பவரே இத்தகைய உயர்ந்த புஸ்தகங்களை



வெளியேற்றுதற்குத் தகுதியும் உரிமையும் உற்சாகமும் உடையவர்கள். இவ்விஷயத்தில் தலைவர்கள் ஊக்கங் காட்டுமாறு வேண்டுகிறோம்.

## எண்டிசைக் காட்சி.

### சட்டசபையில் புகவும் ஜாமீன் வேண்டுமோம்.

"கர்னல் வெட்" என்பவர் புதிய சீர்திருத்தச் சட்டசபைக்கு அபேக்ஷகராக நிற்கும் ஒவ்வொருவரையும்சிறிதுஜாமீன் கட்டும்படி செய்யவேண்டுவது அவசியம்" என்று பார்லிமெண்டில்பேசினாராம். அபேக்ஷகராக நிற்பவர் அத்தனை பேரும் அயோக்கியரென்று அவர் அவலமதி அறிவித்துவிட்டதோ? இந்தியர்கள் பேச்சென்றால் அவர்கட்குக் கேலியாகத்தானிருக்கிறது. இப்படிக் கூலி கொடுத்தும் குறும்பாட்டு வேஷம் போட, ஏன் நம்மவர் கூட்டமாயோடுகின்றனரோ? விருந்திடுபவன் விரட்டியடித்தாலும், மிதவாதிகள் இலையை விட்டு எழுந்திருக்க மாட்டார்கள் போலும். வீண்சிரமம்! வெறுப்பும் அவமானமும் தான் மிச்சம். உயர எறிப் பறித்தாலும், எங்கள் அம்மான் வீட்டுப் புளியில், ஒருபிடி குறையும் வராது.

### நற்பாக்கியமில்லாருக்குத் துப்பாக்கியென்னத்திற்கு?

சென்னையில்,வக்கீல் ஸ்ரீமாந் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் எலெக்ஷன் விஷயமாகப் பேச ஆரம்பித்த போது, தன் பேச்சை ஸாவதானத்துடன் கேட்டிருக்கும்படியாகத் துப்பாக்கியைத் தூக்கிக்காட்டிப் பயமுறுத்தினாராம்.மிகவும்நல்லவர் தாம்; ஆனால் சிறிது தவறிவிட்டார்; அதிலும் அவசியமான சமயத்தில் மெத்தப் படித்ததனால் பித்தம் தலைக்கேறிவிட்டதோ? அல்லது ஆசை அறிவையழித்துவிட்டதோ? காந்தியாக முடியவில்லையே யென்று கனத்த டயராக முயன்றுவிட்டாரோ? இந்த அற்ப விஷயத்தில்,இந்தியச்சகோதரரிடத்தில் இரக்கங்கொண்டு துப்பாக்கிப் பிரயோகம் செய்வேனென்று கூறிய இப்பெரியார், சட்டசபையில் வெற்றி பெற்றால், பீரங்கிப் பிரயோகம் செய்யவும் ஆரம்பிப்பார்போலும். ஏ! பாரதத்தாயே!! உனதுபுத்திரர் என்றுபெயர் வைத்துக்கொண்டு, இப்படியும்சிலர்உலாவுகின்றனரே!!!

## தந்திச் செய்தி.

பினாங்கு ஐப்பசி ௨௯

மதராஸ் உண்டியல் விலை நூற்று நாற்பத்தேழு.

ஈயம் விலை நூற்றிருபத்தாறு.

ரப்பர் விலை நாற்பத்தெட்டு.

ரங்கூன் ஐப்பசி ௨௯

பினாங்கு உண்டியல் விலை நூற்று நாற்பது.

நெல் விலை நூற்றுத்தொண்ணூற்றெட்டு.

உளுந்து ௪௯௦—௪௯௫.

பர்மாக்காரர்கள் சிகரெட் பிடிக்கிறதில்லையென்று பகிஷ்காரம் செய்துவிட்டார்கள்.

### ரங்கூனில் டிராம் வண்டிகள்.

இங்கு, டிராம்வண்டியின் கட்டணத்தொகைகளை அதிகப்படுத்தினதால், ஜனங்கள் அவற்றிலேறிச் செல்லாமல் உறுதியாயும் ஒற்றுமையாகவும் இருந்துவிட்டார்கள். குட்டிக்கரணம் போட்டும் கூடாமற்போனதால், அதிகாரிகள் கட்டணங்களைக் குறைத்துவிட்டனர். இப்போது அமைதியாயிருக்கிறது. "ஒற்றுமையும் உறுதியும் உண்மையான பஹிஷ்காரமும் ஊக்கமானால், ஒவ்வொரு காரியமும் ஸித்திபெறும்" என்பது இதனால் நன்கு விளங்குகிறது.

### நமக்கேன் இந்தவழக்கம்?

இன்று கிடைத்த இரங்கூன் தந்தியால் பர்மாக்காரர்கள் இனிமேல் சிகரெட் பிடிப்பதில்லை யென்று தள்ளுபடி செய் திருக்கிறார்களென்றறிகிறோம். அமெரிக்கர் முதலிய மேலைத் தேசத்தினர் குடியை வெறுத்து வருகின்றனர். மகான்களும் மேதாவிகளும் பிறந்த புண்ணியநாடான இந்தியாவிற் பிறந்திருக்கிற மனிதர்கள் சுருட்டுப்பிடிப்பதையும பீர்ட்டில் சாப்பிடுவதையும் விருத்திசெய்ய முயல்கின்றனர். இவர்கட்கேன் இந்தவழக்கம்?

## பொது வர்த்தமானம்.

கானட் அரசிளங்குமாரரான ஆர்தரும் அவரது குடும்பத்தாரும் தென்னாப்பிரிக்காவிற்குப் புறப்பட்டுச் சென்றனர். இவர் தென்னாப்பிரிக்காவின் புதிய கவர்னர் ஜெனரலாக இருந்துவருவார்.

***

தேங்காயைச் சாப்பாட்டில் தினமும் உபயோகப்படுத்திக் கொள்வதாலும், அதன் எண்ணெயைத் தினந்தோறும் சரீரத்தின்மீது பூசி நன்றாய்த் தேய்ப்பதாலும் க்ஷயரோகம் நீங்கிவிடுமாம். தேங்காயை மிகுதியாக உபயோகிக்கும் மலையாள தேசத்தில் க்ஷயரோகத்தால் பிடிக்கப்பட்டவர்கள் இல்லையாம்.

***

ஐக்யமாகாண லெப்டினெண்ட் கவர்னர் ஸர் ஹார்கோர்ட் பட்லர், மீரட்கலாசாலையில்மாணவர்கூட்டத்தில் பேசியதில் ஒருஸாரமிருந்தது. "அரசியல் இயக்கத்தில் மாணவர்கள் தலையிடக் கூடாதென்று வெளியுள்ளார் கூறுகிறார்களென்றும், அரசியலின் பொருட்டு அவசியப் படிப்பை விலக்கிவிட்டு வெளிச் சென்று விடலாகாது என்றும், மாணவர்கள் அரசியலைக்கவனித்துத் தங்களுக்குள் விவாதம்செய்துகொள்ளலாம்" என்றும் கூறினர்.

***

"இனி ஐரோப்பாவிலிருந்து தென்னாப்பிரிக்கா இந்தியா ஆஸ்திரேலியா முதலிய இடங்களுக்கு வாரம் ஒருமுறையேனும் இருமுறையேனும் மணி ஒன்றுக்கு ௯௦ மைல் வீதம் ஆகாயமார்க்கமாகப் பிரயாணம் செய்யலாம். நீர்க்கப்பல் மூலம் பிரயாணம் செய்யும் காலத்தைக் குறைத்துக்கொண்டு ஆகாயக்கப்பல் மூலம் ௫ நாட்களில் பிரயாணஞ்செய்யலாம்" என்று கமாண்டர்ஸ் டிராவர்டாசன் என்பவர் ஆகாயஸஞ்சாரக்கான்பரன்ஸில் பேசித் தம்மால் தயாரிக்கப்பட்ட அழகான சித்திரப்படமொன்றையும்காட்டினாராம்.

***

### இருதலைக் கோழிக்குஞ்சு.

'ஒருகோழிமுட்டையிலிருந்து ஒரு கோழிகுஞ்சு, இரண்டு தலையுடன் மத்தியில் சதை சம்பந்தமாய், ஒரேஉடல் இரண்டு கண் இரண்டு கால் ஒரே குடல் உடையதாய் வெளிப்பட்டு, சுநாள் அதன் தாய்க் [illegible] அக

இரங்கூனில்

# சுவாமி சிரத்தாநந்தர்.

ராஜமரியாதை.

## பொதுஜனங்களின்வரவேற்பு

நமது நிருபரிடமிருந்து:—

௨௯-௰-௨௰ மாலை ௪-க்கு ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிரத்தாநந்தஜீ அவர்கள் கல்கத்தாவிலிருந்து 'அங்கோரா' என்னும் ஸ்டீமரில் இரங்கூன் ஆயிஸ்வியி வார்ப்பில் வந்திறங்கினார்கள். இந்தியப் பொதுஜனங்கள், வார்ப்பில் காத்திருந்து வரவேற்று வார்ப்பிலிருந்து ஸ்ட்ராண்டுமுகல்ரோட்டு (நாட்டுக்கோட்டை செட்டித்தெரு) மங்கமாரி வீதிவழியாக பக்கோடாரோட் டாவது நம்பர் கிருகத்துக்கு அழைத்துப் போனார்கள். வாலண்டியர்கள் சுமார் ௬00 பேர்களிருக்கலாம். சிலர் குதிரையிலேறிச் சென்றார்கள். முகல்ரோட்டில் பாபுகளும் செட்டிப்பிள்ளைகளும் அநேக தோரணங்களும், கொடிகளும் கட்டியிருந்தார்கள். சுவாமிகள் முகல்ரோட்டுக்கு வரும்போது சுமார் மாலை ௬ மணியிருக்கும். செட்டிப்பிள்ளைகள் வீடுகள்தோறும் தீபாலங்காரங்கள் செய்து நிறைகுடம் வைத்து, சுவாமியவர்கட்கு ரோஜாப்புஷ்பமாலைசாத்தி, பூச்செண்டும் எலுமிச்சம்பழமும் கல்கண்டும் வைத்துத் தரிசித்தார்கள். சுவாமியவர்களும் எதிர் நமஸ்காரம் செய்தார்கள். சுவாமியவர்கள் வார்ப்புக்கு வந்ததுமுதல் சாலைபோய்ச் சேருகிறவரையிலும் மழை விடாது பெய்துகொண்டேயிருந்தது. வீதியில் சுவாமிகளை நாலுசக்கர வண்டியில்வைத்து, சுமார் ௪00 ஜனங்கள் வடம்பிடித்து ஊர்த்துகொண்டு வந்தார்கள். விடாதுபெய்த மழையைத் தடுக்க ஒருவரும் குடைபிடிக்கவில்லை. வீதியில் நிற்பவர்கள் திரும்பு வதற்குக்கூட இடமில்லை. பியாண்டு வாத்தியத்துடன் ஊர்வலம் அ மணியோடு சிறப்பாக நிறைவேறியது.

௩௰-௰-௨௰ சனிக்கிழமை.

சுமார் ௪-மணிக்குஜூப்லிஹாலில் சுவாமிகளுக்கு ஒரு பொதுஜன அட்ரஸ் வாசித்துக்கொடுத்தார்கள். பல்லாயிரக்கணக்கான ஜனங்கள் வந்து கூடியிருந்தார்கள். சுவாமிகள் பேசினது மேடையிலிருந்தவர்களுக்குத் தான் கேட்டது. ஹாலில் இடமில்லாது, அநேக ஜனங்கள், சுவாமிகள் வெளிவரும்போது, தரிசிக்கலாமென்று விடாமழையில் நனைந்துகொண்டே நின்று, ௬-மணிக்கு சுவாமிகள் ஹாலைவிட்டு வெளியில் வந்தவுடன் தரிசித்துச் சென்றார்கள். ௬-மணிக்கு மாந்தலே மெயில் ட்ரெயினில் மாந்தலைக்குப் பிரயாணமாகிச்சென்றிருக்கிறார்கள். ௩௧-௰-௨௰ ஞாயிற்றுக்கிழமை மாந்தலே ஆரியசமாஜக்கூட்டத்து அக்ராசனம் வகித்துவிட்டு ௨-௧௧-௨௰ இரங்கூனுக்குத் திரும்புவார்களென்று தெரிகிறது. அன்புடன் எதிர்கொண்ட நாட்டுக்கோட்டை நகரத்தாரும் ஒரு அட்ரஸ் வாசித்துக்கொடுத்தால், கண்ணியமாயிருக்கும். தலைவர்கள் கவனிப்பார்களாக.

நந்துக்காக வெளியில் சென்றிருந்த பொழுது, காகத்தினால்கொத்தப்பட்டு அதன் குடல்வெளியாகி மரணமடைந்துவிட்டது. அதை எடுத்து ஒரு சிசாவில் பாடஞ்செய்துகொடுக்கப்பட்டிருக்கிறது' என்று கோலக்கஞ்சாரிலிருந்து ஸ்ரீமாந் பழ. கண. அ. ராம. சுப்பிரமணியன் செட்டியார் எழுதுகிறார்கள்.

### உள்ளூர்.

தீபாவளிப் பண்டிகை:—எறக்குறைய இந்நகர ஜனங்கள் எல்லாருமே சுதேசி உடைகளை வாங்கி உடுத்துக் கொண்டார்கள். சுமார் ௩௫0 மாணவர்கள் அடங்கியுள்ள ஸ்ரீ. மீ. சு. வித்யாசாலை மாணவர்களுள் ௧௩ மாணவர் தவிர மற்றெல்லாரும் சுதேசியமே கொண்டாடினார்கள். சுதேசியத்தின் ஊக்கம் நாட்டின் க்ஷேமலாபத்தை நன்கு விளக்கிக் காட்டுகின்றது. நமது மாகாணத்தில் நெய்யப்பெறும் பகட்டான பட்டு லேஞ்சிகளை பெரும்பாலும் புடவைக் கடைகளில் விலையாயின. ஆனால் சீனி வெடிக்கட்டுகளில் அத்துணை செலவிட்டது கொண்டாடத் தக்கதன்று.

### சந்தாவிபரம்.

| | | | |
|---|---|---|---|
| இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு ஒரு ஒன்றுக்கு ... | ௪ | 0 | 0 |
| சிங்கப்பூர் முதலிய வெளிநாடுகளுக்கு ஒரு ஒன்றுக்கு... | ரூ ௫ | 0 | 0 |
| தனிப்பிரதி ஒன்றுக்கு ... | 0 | ௧ | ௬ |

### விளம்பர விகிதம்

| | | | |
|---|---|---|---|
| மாதம் ௧-க்கு பத்தி ௧-க்கு ... | ௨0 | 0 | 0 |
| ௸ அரைப்பத்திக்கு ... | ௧௧ | 0 | 0 |

மானேஜர்,
தனவைசிய ஊழியன் ஆபீஸ்.
காரைக்குடி.

## கடைத்தெரு.

### பினங்கு.

ஐப்பசி௴ ௧௮௳

| | | |
|---|---|---|
| கொப்பரா பீக்கல் ௧-க்கு | | ௨௨ |
| மிளகு முதல்தரம் | ,, | ௩௧ |
| ௸ ௨-ந்தரம் | ,, | ௨௬ |
| சவ்வரிசி | ,, | ௮—௫0 |
| ௨௯ ஜாவாசீனி | ,, | ௩௧ |

ஐப்பசி௴ நடப்புவட்டி முக்காலே அரைக்காலும் அரைவீசம்.
தவணை வட்டி முக்காலே அரைக்கால்.
காட்டுக்கடைகளுக்கு வெயன்வீசரைவீசம்

| | | |
|---|---|---|
| பவுன் விலை | ... | ௧௨—௨0 |
| பாங்க் வட்டி | ... | ௮ |
| ௸ நாடுகளில் | ... | ௩ - |
| மணியார்டர் விலை | ... | ௱௩௭ |

பணம் அதிகப்பிரியம்.

### சென்னை.

பவுன்விலை பதினாறரையேஅரைக்கால்.
வெள்ளி விலை நூற்றுப்பதினைந்து.

### உள்ளூர்.

| | | | | |
|---|---|---|---|---|
| மதராஸ்உண்டியலுக்கு வட்டம் | | 0 | ௭ | 0 |
| ரங்கூன் | ௸ | ௧ | ௮ | 0 |
| அந்நிய நாடுகளிலிருந்து வரும் போஸ்டல் ஆர்டருக்கு | | | | |
| ஷில்லிங் ௧-க்கு | | ரூ. 0 | ௮ | ௯ |
| ௸பவுன் ௧-க்கு | | ரூ. ௧0 | | |

### மதுரை.

உள்ளூர் நூல் ௨௰ சிமிளி ரூ. ௰௭
,, ,, ௨௰ பழுக்கா ரூ. ௰௭ ௬ 0

## லாட் கோவிந்த தாஸ்.

ஒத்துழையா இயக்கம் அரும்பா முன்னே, விசேஷக் காங்க்ரஸ் கூடா முன்னே, சில சட்ட சபை அபேட்சகர்களுக்கு உறுதி மொழி கூறிய துண்மையே. இப்பொழுது நான் காந்தி யடிகளைப் பின்பற்றும் நெறியில் நிற்பதைக் கண்ட அபேட்சகர் என் பெயரைத் தம் குறிப் பேடுகளிலிருந்து நீக்கி விட்டனர். லாட் கோவிந்த தாஸ் மாத்திரம் இன்னும் என் பெயரைக் கையாண்டு வருவதைக் கேள்வியுற்று வருந்துகிறேன். அவர் "சுதேசமித்திர"னிலும் என் பெயரை வெளியிட்டிருக்கிறார். நான் ஒத்துழையா இயக்கத்தில் சேர்ந்துள்ளதை லாட் கோவிந்ததாஸ் இத்துணை நாள் உணராது கிடந்தது வியக்கத்தக்கது.

திரு-வி. கலியாணசுந்தரன்,
பத்திராசிரியன்
"நவசக்தி"



## மலாய்நாட்டுக் கடிதம்.

ஐப்பசி௴ ௰௩௳

"இவ்விடம் பகுதியில் பணம்இருக்கப்பட்ட பிரியம் இன்னவிதமென்று எழுத முடியாது. உண்டியல் விலை நாளுக்கு நாள் கூடிக்கொண்டேவருகிறது. குறைந்திருந்த சமயத்தில் இந்தியாவிலிருந்து அனுப்பியிருக்கிறார்கள். புதுக்கடைகள் கப்பலுக்குக் கப்பல் வந்துகொண்டேயிருக்கின்றன. இந்தியாவிலிருந்து இந்த வருஷம் புடைவைகள் நம்மவரின் கடைதவறாமல் வரவழைக்கப் பட்டிருக்கின்றன. எந்தச் சாக்கின் விலையும் நிதானமாக இல்லை. ஏறுவதும் இறங்குவதுமாகவே இருக்கிறது. அரிசியை வாரம் ஒன்றுக்கு ௰ கந்தத்திற்குள் வாங்கினால் லைசென்ஸ்கிடையாது. அதற்குமேலே வேண்டுமானால் லைசென்ஸ் வேண்டும். அரிசிவிலை குறையுமென்று சொல்கிறார்கள். தற்காலம் இனங்களில் ஒருவரும் கடன் கொடுப்பதில்லை. காரணம் பணப்பிரியந்தான்" என்று ஈப்போவிலிருந்து ஒரு நிருபர் எழுதுகிறார்.



## மாதர்பகுதி.

### மாதர் நிலைமை.

மாதர்கட்கு ஏற்பட்ட முக்கியமான வேலை வீட்டிலுள்ள காரியங்களைப் பார்ப்பதும் புருஷன் கட்டளைகளை நிறைவேற்றவேண்டியதுமாகும். முற்காலத்தில் பலமாதர்கள் ஒருங்கே கூடிப் பேசும்படிநேர்ந்தால், அவரவர் கேட்டுத், தெரிந்துகொண்ட தெய்வ சம்பந்தமான விஷயங்கள் புருஷ கைங்கர்யம் சிசுபோஷணை முதலிய இன்றியமையாத விஷயங்களைப் பற்றியே பேசுவார்கள். இப்பொழுதுள்ள நவீனநாகரீகப்பெண்கள் கூடிப் பேச நேர்ந்தால், முன் சொல்லிய விஷயங்கள் மறக்கப்பட்டு அண்டை அயலார் வீட்டுச் சண்டைப்பேச்சுகளையும், வீட்டிலுள்ள மாமி மாமன் நாத்தி முதலியவர்களைப் பற்றியுள்ள வீண் வம்புகளையும்இழுத்துப்பேசிப் பலருக்கும்உபத்ரவத்தை யுண்டாக்கி விடுகின்றனர். தவிர இரண்டொருவர் பழையமுறையை ஓட்டிப்பேசினாலும், பேதமுண்டாகும்படிப் பேசுகிற சக்தி இந்நாளில்தான் உண்டாயிருக்கிறதென்று நினைக்கிறேன். இவர்கள் ஊர் வம்பெல்லாம் பேசிவிட்டு, வெளியிலிருந்து வேலையில் அலைந்து திரிந்து வரும் புருஷனிடத்தில் வெளியில் நடந்தவற்றைப் பற்றிக்கூறி உபத்திரவப்படுத்துகிறார்கள். அதைக் கேட்டு அவர்கள்பக்கத்தில் தீர்ப்புச் சொல்லாவிட்டால் சமாப்திக்கு அளவில்லை. இந்த நிலைமையில், கஷ்டப்பட்டு இளைப்பாறவந்த புருஷனுக்கு, வீடு காடாகத்தோன்றுகிறது. இதற்கென்னசெய்வது! பெண்கட்கு நல்ல கல்விப் பயிற்சியில்லாத படியாலும் பெரியோர் சகவாசமில்லாதபடியாலுந் தான் இந்த கஷ்டமுண்டாயிருக்கிறது. இந்தக் கஷ்டம் ஒழிவதற்கு வேண்டிய முயற்சியை சமூக அபிமானிகள் செய்தல் வேண்டும்.

பெரியணன், புதுவயல்.

### சில குறிப்புகள்.

"சிலஜீவன்கள் சர்வகலா சங்கப் பரீக்ஷையில் தேறியிருக்கலாம். சிறந்த நாகரீகம்பெற்றுமிருக்கலாம். உயர்ந்த சம்பளம்பெறும் போக்யதையும் பெற்றிருக்கலாம். குடும்பத்தை நடத்தும் திறமையற்றவர்களாயிருப்பின், அந்த உயர்தரவித்தை யாதொரு பயனையும் தராது.

"ஆண்மக்கள் வேலைக்குப்போய் அலுத்தவர்களாகப் பசியுடன் வீட்டுக்குத் திரும்பி வந்தபோது, சுவையற்ற உணவுகளை உண்ணும்படி அவர் முன் இடுவது அநியாயமும் நிஷ்டூரமான காரியம்."

"மாதர்கள் ஒரு நாளைக்குமேல் [illegible] பிரயாணம்செய்ய நேர்ந்

னால், துணையாகப் பந்துக்களில் யாரையேனும் உடன்கொண்டு செல்ல வேண்டுமேயன்றித் தனித்துச் செல்லல் கூடாது."

"குணசாலியான பெண் தன்புருஷனுக்குத் தலைநாயகமாய் விளங்குகின்றாள். அவனுக்கு வெட்கத்தை யுண்டுபண்ணுகிறவளோ அவனுக்கு எலும்புருக்கும் நோயாக இருக்கிறாள்."

"சிலபெண்கள் குடித்தனத்துக் குரியவற்றைச் செய்யவேண்டிய நேரத்தை வேறு காரியங்களிற் போக்குவதால் அதிக ஸங்கடங்கள் குடும்பங்களிலுண்டாவதுண்டு."

"பகவான் ஸந்நிதானத்திலும் படைப்பின் முன்னிலையிலும் உத்தமர்யாவரெனின், தமது குடும்பங்களில் நன்னடைக்கையாய் நடக்கிற வர்களேயாவார்"

"பெண்ணே! உன்புருஷனைப்பற்றி உனக்கிருக்கிற கவலை, உன் வேலைக்காரனுக்கு இருக்குமா?"

"பெண்கள் தமக்குரிய வரம்பைக் கடந்து நடக்குமாறு புருஷர் பார்த்திருத்தல்கூடாது."

"சற்குண மனைவியே புருஷனுக்குச் சிறந்த நிதியமாகிறாள்.





சொ. முருகப்பசெட்டியாரவர்களால் காரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டுப் பிரசுரஞ் செய்யப்பெற்றது.

